# காலபைரவாஷ்டகம்

(எட்டு ச்லோகம் கொண்டது ‘அஷ்டகம்’.)

**தே3வராஜஸேவ்யமான பாவனாங்க்4ரி பங்கஜம்**
**வ்யால யக்ஞஸூத்ர - மிந்து3 சேக2ரம் க்ருபாகரம்**
**நாரதாதி3யோகி3 ப்3ருந்த3 வந்தி3தம் தி3க3ம்பரம்**
**காசிகாபுராதி4நாத2 காலபை4ரவம் ப4ஜே** 1

இந்திரனால் வணங்கப்படுகிற மிகத் தூயமான தாமரை போன்ற பாதங்களை உடையவரும், சர்ப்பத்தைப் பூணூலாக தரித்திருப்பவரும், சந்திரனைத் தலையில் தரித்திருப்பவரும், தயைச் சுரங்கமும், நாரதர் முதலான யோகிக் கூட்டங்களினால் வணங்கப்படுகின்றவரும், திக்குகளையே ஆடையாக தரித்திருப் பவருமான காசித்தலத்தைக் காக்கும் ஸ்ரீ காலபைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**பா4நு கோடிபா4ஸ்வரம் ப4வாப்3தி4தாரகம் பரம்**
**நீலகண்ட2மீபஸிதார்த2 தா3யகம் த்ரிலோசனம்**
**காலகால - மம்பு3ஜாக்ஷமக்ஷ சூலமக்ஷரம்**
**காசிகாபுராதி4 நாத2 காலபை4ரவம் பஜே** 2

கோடி சூர்யனின் ஒளியைப் போல பிரகாசிப்பவரும், பிறவிக் கடலைத் தாண்டு விப்பவரும், பரம்பொருளும், கருத்த கழுத்தை உடையவரும், வேண்டு வதை அளிப்பவரும். முக்கண்ணரும், யமனை அடக்குபவரும், தாமரைப்பூ போன்ற கண்களை உடையவரும், ருத்ராக்ஷம், சூலம் இவைகளை ஏந்தியவரும், அழிவற்ற அக்ஷரவடிவரும் காசீ தலத்தைக் காக்கும் காலபைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**சூலடங்கபாசத3ண்ட3பாணி - மாதி3: காரணம்**
**ச்யாமகாயம் ஆதி3தே3வமக்ஷரம் நிராமயம்**
**பீம4 விக்ரமம் ப்ரபு4ம் விசித்ரதாண்ட3வ ப்ரியம்**
**காசிகாபுராதி4 நாத2 காலபை4ரவம் ப4ஜே** 3

சூலம், கோடாரி, பாசக்கயிறு, தண்டம் இவைகளைக் கையில் ஏந்தியவரும் எல்லா உலகத்திற்கும் முதற் காரணமாக உள்ளவரும், கருத்த மேனியரும், முதற் கடவுளும், அக்ஷரரூபியும், பிணியற்றவரும், அஞ்சத்தக்க பராக்கிரமம் கொண்டவரும், ப்ரபுவும், பலவித நடனங்களில் பற்றுக் கொண்டவரும், காசீத் தலத்தைக் காப்பவனும் கால பைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**பு4க்தி முக்தி தா3யகம் ப்ரசஸ்தசாருவிக்3ரஹம்**
**ப4க்தவத்ஸலம் ஸ்தி2ரம் ஸமஸ்தலோக விக்3ரஹம்**
**நிக்வணன் - மனோஜ்ஞ ஹேம கிங்கிணீ லஸத்கடிம்**
**காசிகாபுராதி4நாத2 காலபை4ரவம் ப4ஜே** 4

போகத்தையும், மோக்ஷத்தையும் அளிப்பவரும், போற்றத்தக்கதான அழகான சரீரத்தை உடையவரும், பக்தர்கள் பால் அன்பு கொண்டவரும், என்றைக்கும் அழிவற்றவரும், எல்லா உலகத்தின் சரீரமாக விளங்குபவரும், மனதுக்கு ரம்யமாக சப்திக்கின்ற தங்கமயமான சலங்கை விளங்கும் இடுப்பை உடையவரும், காசித்தலத்தைக் காப்பவனுமான கால பைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**த4ர்மஸேது பாலகம் த்வத4ர்மமார்க3 நாசகம்**
**கர்மபாச மோசகம் ஸுசர்மதா3யகம் விபு4ம்**
**ஸ்வர்ணவர்ண கேசபாசசோபி4 தாங்க3 நிர்மலம்**
**காசிகாபுராதி4 நாத2 காலபை4ரவம் ப4ஜே** 5

தர்மத்தின் அரணைக் காப்பவரும், அதர்ம மார்க்கத்தை அழிப்பவரும், கர்மாக்களிலிருந்து ஏற்படும் பந்தத்தை விடுவிப்பவரும், மிக்க ஸௌக்யத்தை அளிப்பவரும், தங்கம் போன்ற காந்தி கொண்ட தலை மயிரினால் அழகாக்க காணும் சரீரத்தை உடையவரும், சுத்தமானவரும், காசித்தலத்தைக் காப்பவனுமாகிய எங்கும் நிறைந்த விபுவான கால பைரவ மூர்த்தியை போற்றுகிறேன்.

**ரத்னபாது3கா ப்ரபா4பி4ராமபாத3 யுக3மகம்**
**நித்ய - மத3விதீய மிஷ்ட தை3வதம் நிரஞ்ஜனம்**
**ம்ருத்யுத3ர்ப நாசநம் கராலத3மஷ்ட்ர பூ4ஷணம்**
**காசிகாபுராத4 நாத2 காலபை4ரவம் ப4ஜே** 6

ரத்தினக்கற்கள் இழைக்கப்பட்ட பாதுகைகளின் ஒளியினால் மிக அழகாகப் பிரகாசிக்கும் இரு பாதங்களை உடையவரும், நித்யமானவரும், தமக்கு வேறாக ஏதும் அற்றவரும், விரும்பிப் போற்றத்தக்க தெய்வமானவரும், மாசற்றவரும், யமனின் கொழுப்பை அடக்கியவரும், கோரைப் பற்களை அலங்காரமாக கொண்டவரும், காசித்தலத்தைக் காப்பவனுமாகிய பாலகருமான காலபைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**அட்டஹாஸ பி4ன்ன ப3த்மஜாண்ட3 கோச ஸந்ததிம்**
**த்4ருஷ்டிபாத நஷ்டபாபஜாலம் உக்3ரசாஸநம்**
**அஷ்டஸித்3தி4தா3யகம் கபால மாலிகாத4ரம்**
**காசிகாபுராதி4 நாத3 காலபை4ரவம் ப4ஜே** 7

(பிரளய காலத்தில் தன்னுடைய) கோரமான சிரிப்பினாலேயே பிளக்கப்பட்ட பிரம்மாண்ட வரிசையை உடையவரும், (தன்) பார்வை விழும் மாத்திரத்திலேயே பாபக் கூட்டங்களை தொலைப்பவரும், கடுமையான தண்டனையை விதிப்பவரும், (அணிமா, மஹிமா என்றதான) எட்டு ஸித்திகளை அளிப்பவரும், மண்டை ஓடுகளை மாலையாக தரித்திருப்பவரும், காசித்தலத்தைக் காப்பவனுமாகிய பாலகருமான காலபைரவ மூர்த்தியை போற்றுகிறேன்.

**பூ4தஸங்4க நாயகம் விசாலகீர்த்தி தா4யகம்**
**காசிவாஸி லோகபுண்ய பாப சோ4தகம் விபு4ம்**
**நீதிமார்க3 கோவித3ம் புராதநம் ஜக3த்பதிம்**
**காசிகாபுராதி4நாத காலபை4ரவம் பஜே** 8

பூதக்கணக் கூட்டத்தின் தலைவரும், அகண்டமான புகழை அளிப்பவரும், சியில் வசிக்கின்ற மக்களின் புண்ணிய பாபங்களை பரிசோதிப்பவரும், எங்கும் நிறைந்து விளங்குபவரும், நீதி வழியை நன்கு அறிந்தவரும், மிகப் பழமையான உலகுக்கு நாயகனும், காசீதலத்தைப் பாதுகாப்பவனுமாகிய கால பைரவ மூர்த்தியைப் போற்றுகிறேன்.

**காலபை4ரவாஷ்டகம் பட2ந்தி யே மனோஹரம்**
**ஜ்ஞானமுக்தி ஸாத4கம் விசித்ர புண்ய வர்த4னம்**
**சோகமோஹலோப4 தை3ன்ய கோபதாபநாசநம்**
**தேப்ரயாந்தி காலபை4ரவாங்க்4ரிஸந்நிதி4 ம்த4ருவம்** 9

மிகவும் அழகானதும், ஞான மோக்ஷத்தை அளிப்பதும், பலவித புண்ணியங்களை வளர்க்க வல்லதும், சோகம், மோஹம், லோபம், ஏழ்மை, கோபதாபங்கள் இவைகளைத் தொலைக்க வல்லதுமான கால பைரவரின் இந்த எட்டு ச்லோகம் கொண்ட துதியைப் பாராயணம் செய்பவர்கள். (மேலே கூறிய நற்பயன்களோடு) நிலைத்ததான காலபைரவரின் பாத ஸந்நிதியை அடைவார்கள்.

